9. அனைத்து சிவபூசைகளும், குருபூசைகளும், குடமுழுக்கு, பண்டிகைகளும், திருவிழாக்களும் ஒன்று விடாமல் கலந்து கொள்ளுங்கள். அனைத்தும் நமக்கு அளவிலா ஆனந்தம் தருபவை.
10. சிவ தலங்கள் யாத்திரை செய்து கொண்டே இருங்கள். தேவார பாடல் பெற்ற தலங்கள் 276 உம், சிவமலை கோவில்களும், திருவாசக தலங்களும், வைப்புத் தலங்களும் சென்று தரிசனம் செய்யுங்கள்.
11. உங்கள் வீட்டில் உங்கள் வசதிக்கேற்ப, சிவபூசை நடத்துங்கள். திருவாச முற்றோதல்கள், திருமுறை விண்ணப்பம், கூட்டு வழிபாடு, மாகேசுவர பூசை போன்று தொடர்ந்து நடத்துங்கள்.
12. உழவாரப்பணி செய்யுங்கள். உங்களால் முடிந்த ஒரு சிவதொண்டை இடைவிடாது செய்து வாருங்கள்.

இந்த 12 உம் செய்து வந்தால், இப்பிறவியில் மிகுந்த பேரின்பமும், சிவபெருமான் தரிசனமும், திருவடிப்பேறும் உங்களுக்கு கிட்டுவது திண்ணம். உலகின் வீதிகள் தோறும் சைவ பாடசாலைகள் அமைப்போம்.

## *7. சைவ வணிகர்கள் செய்ய வேண்டியது யாது ?*

1. உங்கள் கடைகளிலும் அலுவலகங்களிலும் எப்போதும் திருநீறும் குங்குமமும் ஒரு சம்புடத்திலிட்டு அனைவரையும் பூச சொல்லவும்.
2. கடைகளுக்கு பாரம்பரிய பெயர்களை சூட்டவும். நாயன்மார் பெயரை பயன்படுத்தவும். தமிழில் பெரிய எழுத்தில் பெயரை எழுதவும்.
3. உங்கள் நிறுவன பொருட்களில் தமிழில் திருக்குறள், திருமுறை வாசகங்களைப் பதிக்கவும். சைவ படங்களையும் பதிவிடலாம்.
4. சைவ சமய அடிப்படை புத்தகங்கள், வழிபாட்டு மலர்கள், நாயன்மார் போன்ற புத்தகங்களை விலைக்கோ, தொண்டாகவோ கொடுங்கள்.
5. நால்வர் படமும், சைவ வாசகங்களும் ஆங்காங்கே உங்கள் கடைகளில் யாவர் கண்களும் படும் இடத்தில் பதித்து வைக்கவும்.
6. கைபேசி, கணினிகளில் தமிழின் பயன்பாட்டை விளக்கவும், பயன்படுத்த ஊக்கமும், தமிழுக்கு முதலிடமும் கொடுங்கள்.
7. உங்கள் ஊரில் நடைபெறும் ஆன்மீக நிகழ்வுகள் பற்றிய அறிவிப்பு பலகை வைக்கவும். எல்லா நிகழ்ச்சிகளில் கலக்க ஊக்கமளிக்கவும்.

**சிவனொடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை**
**அவனொடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை**
**புவனம் கடந்து அன்று பொன் ஒளி மின்னும்**
**தவனச் சடைமுடித் தாமரை யானே.** - திருமந்திரம்.

*மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்.*



உ
சிவமயம்
நமப் பார்வதி பதையே அரகர மகாதேவா

தென்னாடுடைய சிவனே போற்றி ! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி !
ஏகம்பத்துறை எந்தாய் போற்றி ! பாகம் பெண்ணுரு ஆனாய் போற்றி !
அண்ணாமலை எம் அண்ணா போற்றி ! கண்ணாரமுதக் கடலே போற்றி !
காவாய் கனக திரளே போற்றி ! கயிலை மலையானே போற்றி போற்றி !
**திருச்சிற்றம்பலம்.**



# சைவ சமயம் அடிப்படை நுட்பம்

சைவத்தின் மேல் சமயம் வேறில்லை அதில்சார் சிவமாம்
தெய்வத்தின்மேல் தெய்வம்இல்லெனும் நான்மறைச் செம்பொருள்
வாய்மை வைத்த சீர்திருத் தேவாரமும் திருவாசகமும்
உய்வைத் தரச்செய்த
நால்வர் பொற்றாள் எம்உயிர்த்துணையே.

பள்ளிக்கரணை சிவனடியார் திருக்கூட்டம்
சிவதொண்டன் வெல்க தமிழ் மீனாகுமார் M.E.
மின்னஞ்சல்: shivathondu14@gmail.com
வலைப்பூ: http://esanadi.blogspot.in YouTube Channel: Shivakudumbam

# சைவ சமயம் - அடிப்படை நுட்பம்

## 1. சிவபெருமான் அழிக்கும் கடவுளா ? கடவுள் யார்?

இறைவன் ஒருவனே என்ற அடிப்படைக் கொள்கையைத் தெளிவாக எடுத்துரைக்கிறது நம் சைவ சமயம். அனைத்திற்கும் முழுமுதற் கடவுளாக சிவபெருமானைக் குறிக்கிறது சைவ சமயம். "சிவபெருமான் அழிக்கும் கடவுள். சிவபெருமானை கும்பிட்டால் சோதிப்பார்" என்று நண்பர் ஒருவர் கூறினார். அவரைப் பார்த்து நகைப்பதைத் தவிர வேறொன்றும் எனக்குத் தோன்றவில்லை. அவரிடம் கேட்டேன், அவ்வாறு எந்த சமய நூலில் எழுதப்பட்டிருக்கிறது என்று ? பதில் இல்லை.

இவ்வாறு சிவபெருமான் பற்றிய பல முற்றிலும் தவறான கருத்துக்கள் மக்களிடம் பரவியுள்ளது. பிறப்பு இறப்பு இல்லாத, முதலும் முடிவும் இல்லாத, பேரருளும் செல்வங்களும் இன்பமும் தரக்கூடிய, கேட்டவர்க்கு கேட்ட வரத்தை தரக்கூடிய, இந்த பேரண்ட புவனங்களுக்கெல்லாம் ஒரே தலைவராக இருப்பவர் சிவபெருமான் ஒருவரே என்று அநாதியான சைவ சமயம் கூறுகிறது. இவை யாவும் பன்னிரு திருமுறைகளில் பதியப்பட்டிருக்கிறது. சிவபெருமான் 5 தொழில்களை உடையவர். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் மற்றும் அருளல். படைத்தல் தொழில் புரிய பிரம்மனையும், காத்தல் தொழில் செய்ய திருமாலையும், அழித்தல் அல்லது ஒடுக்குதல் தொழில் புரிய உருத்திரனையும், மறைத்தலுக்கு மகேசுவரனையும் அருள் செய்வதற்கு சதாசிவத்தையும் கருவியாக பயன்படுத்துபவர். மகேசுவரரும் சதாசிவமும் சிவபெருமானின் உருபங்களே. உருத்திரன் சிவபெருமானிடம் வேண்டி அவரின் உருவத்தையே பெற்றவர். உருவ ஒற்றுமையால் பலர் குழப்பமடைகின்றனர். சிவபெருமானைத் தவிர மற்ற யாவும் அவருக்கு கருவிகளே. அந்த கருவிகளை பயன்படுத்தியே அவர் யாவையும் ஆட்டுவிக்கிறார். அந்த பரம்பொருளை வணங்கவே நம் பிறவி நோக்கம்.

சிவபெருமான் எட்டு குணங்களைக் கொண்டவர். யாரையும் சார்ந்திராமல் தனித்து இயங்க வல்லமை பெற்ற தன்வயத்தனாதல், குற்றமற்ற தூய உடலை உடையவர், இயற்கை உணர்வினனாதல், அனைத்தைப் பற்றியும் முக்காலத்தைப் பற்றியும் ஒருசேர அறியக்கூடிய முற்றறிவுடையவர், இயல்பாகவே பாசங்களில் இருந்து நீங்கப்பெற்றவர், பேரருள் உடைமை, முடிவில்லாத ஆற்றல் உடைமை, வரம்பில்லாத இன்பம் உடைமை ஆகிய எண் குணங்களை உடையவர்.

யார் எந்த வரம் கேட்டாலும் உடனே கொடுத்துவிடுவார். கேட்காமலேயே கொடுக்கும் தெய்வம் சிவபெருமான். இதனாலேயே இவரைப் பித்தன்



6. சுற்றுலாக்களுக்கு செல்லும் போதும், மற்ற விடுமுறை நாட்களின் போதும், திருவண்ணாமலை, சிதம்பரம், சீர்காழி, மதுரை, திருநெல்வேலி, அவிநாசி, திருவொற்றியூர், திருவான்மியூர், மயிலை, திருவாலங்காடு, குமரனின் 6 படை வீடுகள் என்று எண்ணற்ற தலங்கள் உள்ளன. அவ்வாறான புகழ்பெற்ற தலங்களுக்கு அழைத்து சென்று அதனோடு தொடர்புடைய புராண வரலாறுகளையும் தலவரலாறுகளையும் அவர்களுக்கு எடுத்து கூறுங்கள்.
7. உங்கள் குழந்தைகள் புறசமயத்தினர் பள்ளிகளில் படிக்கும் போதோ, புறச்சமய நண்பர்களுடன் பழகும் போதும், அவர்களோடு எவ்வாறு பழக வேண்டும், எப்படிப் பேச வேண்டும் என்பதை தேவையுள்ளவர்கள் சொல்லிக் கொடுக்க வேண்டும்.
8. முடிந்த மட்டில் கிறிஸ்தவ / முஸ்லிம் பள்ளி கல்லூரிகளில் குழந்தைகளை சேர்க்காதீர்கள். பெரும்பாலானவர்களின் குறிக்கோளே, கல்வி மூலம் மதமாற்றம் செய்வது. வேறு வழியின்றி சேர்க்கும் நிலை ஏற்பட்டால், நம் சமய வழிமுறைகளை குழந்தைகட்கு எடுத்துக் கூறி, வலுவாக தினமும் பின்பற்றவும், கடைப்பிடிக்கவும் செய்வது பெற்றோரின் தலையாய கடமை.
9. குழந்தைகளுக்கு முன்னோடியாக இருப்பது பெற்றோர் கடமை.

## 6. சைவர்கள் செய்ய வேண்டியது யாது ?

1. ஆனந்தமாக நெற்றி முழுவதும் திருநீறு இடுங்கள். வேலை செய்யும் இடங்கள், மக்கள் கூடும் இடங்கள், வீடு, விழாக்கள் என்று எங்கும் சற்றும் கூச்சப்படாமல் நம் திருநீற்றை நாம் அணிய வேண்டும்.
2. உருத்திராட்சம் அணிந்திடுங்கள். பிறரை அணிய ஊக்குவியுங்கள்.
3. தினமும் காலையில் உங்கள் வீட்டில் விளக்கேற்றி, திருமுறை பாடல் ஓதி, சிவபெருமானை எழுந்தருளச் செய்யுங்கள்.
4. தினமும் திருக்கோவில் சென்று அப்பனை தரிசனம் செய்யுங்கள்.
5. தினமும் நண்பர்கள் ஓரிருவரிடமாவது சைவ சமய விடயங்களை பேசுங்கள். சிவபெருமானின் புகழ் பேசுங்கள். திருமுறை பேசுங்கள்.
6. சைவ நிகழ்வுகள் பற்றிய தகவல்களை அறிந்து அனைத்து நிகழ்வுகளிலும் கலந்து கொள்ளுங்கள். (வீட்டில் வெட்டியான நேரம் அனைத்தும், தொலைக்காட்சி பார்க்கும் நேரமும், இதற்கு மாற்றப்படலாம்.) நிகழ்ச்சிகள் செல்ல செல்ல நிறைய கற்கலாம்.
7. ஆங்கில வார்த்தைகள் பேசுவதை தவிர்த்து பிழையில்லாத தமிழில் பேசுங்கள், எழுதுங்கள். தமிழில் கையெழுத்து போடுங்கள். பொது இடங்களில் தமிழில் எழுதுங்கள். தமிழ் தெய்வ மொழியாகும்.
8. சைவ நூல்களை படியுங்கள். சொற்பொழிவுகள் கேளுங்கள். தினமும் நம் சைவ ஞானம் வளர்ந்து கொண்டே போக வேண்டும்.

## *5. சைவ பெற்றோர்கள் செய்ய வேண்டியது யாது ?*

சைவ பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்கு இளம் பருவத்திலிருந்தே இறைவனை அடையாளம் காட்டி, அவன் மீது அன்பு வைத்திருக்கும் அவசியத்தையும், நம் சமயத்தின் ஆணி வேரை விதைக்கும் முக்கிய கடமையையும் செய்ய வேண்டும். இது மிகவும் இன்றியமையாததாகும்.

1. குழந்தைகளை வாரம் ஒரு முறை தவறாமல் கோவிலுக்கு கூட்டிச் செல்ல வேண்டும். முடிந்தவர்கள் தினமும் கூட்டிச் செல்லலாம். கோவிலில் நாம் கும்பிடும் முறைகள், ஏன் எதற்கு செய்கிறோம் என்பதை அவர்கட்கு புரியும் வகையில் கட்டாயம் சொல்லித் தர வேண்டும். அவர்களின் வினாக்களுக்கு தகுந்த விடையளிக்க வேண்டும். (அதற்கு முன்னர், அந்த கேள்விகளுக்கு நமக்கு சரியான விடை தெரிந்திருக்க வேண்டும் !!! நாமும் நம் சமயம் அறிவோம்.)
2. குழந்தைகள் எளிதில் பாடல்களை மனனம் செய்து விடுகிறார்கள். ஆகையால், அவர்களுக்கு சிவபுராணம் முதலிய திருமுறை பாடல்களை, புத்தகங்களை படிக்க கொடுத்து, தினமும் காலையில் சில பதிகங்கள் ஓதி, தோப்புக்கரணம் போட்டு பூசை செய்ய சொல்ல வேண்டும். இதற்கு 10 நிமிடங்கள் முதல் 30 நிமிடம் வரை தான் ஆகும். ஆனால், இது மிக முக்கியமானது. தினம் சொல்ல அது மனனமாகும்.
3. சமயகல்வி மிகவும் இன்றியமையாதது. சைவப் பாடம் என்ற பாடம் முன்பு நம் பாடசாலைகளில் கற்பிக்கப் பட்டு வந்தது. தற்போது பெற்றோர்கள் தாம் தம் குழந்தைகளுக்கு போதிய சமயகல்வி கொடுப்பது இன்றியமையாததாகிறது. பன்னிரு திருமுறை, சமய குரவர்கள், நம் சின்னங்கள், 63 நாயன்மார்கள் வரலாறு, நம் சமய நூல்கள் எவை, சமய சின்னங்கள் எவை போன்ற அடிப்படை கல்வி அனைவருக்கும் அவசியம். ஒவ்வொரு வாரமும் குறைந்தது 2-4 மணி நேரம் சமயகல்வி வகுப்புக்கு அனுப்புவது மிக மிக அவசியம்.
4. திருவிளையாடல், திருவருட்செல்வர், அகத்தியர், ராஜராஜ சோழன், பட்டினத்தார், ஔவையார், காரைக்கால் அம்மையார், நந்தனார், கந்தன் கருணை, சரஸ்வதி சபதம், சம்பூர்ண ராமாயணம் போன்ற எண்ணற்ற அருமையான சினிமா படங்கள் உள்ளன. அவ்வப்போது குழந்தைகளோடு சேர்ந்து நீங்களும் அவர்களுக்கு அந்த கதைகளை பற்றி உரையாடிக் கொண்டே பாருங்கள்.
5. தமிழிலும் ஆங்கிலத்திலும் தனித்தனியாக உரையாட கற்றுக் கொடுங்கள். தமிழில் ஆங்கிலத்தை கலப்பது வேண்டாம். ஆங்கிலம் கலக்காமல் தமிழ் நன்றாக தெரிந்து பேச வேண்டும். இரண்டையும் கலந்து பேசுவது கூடாது. தமிழ் இறைவனே பேசிய மொழி.



என்றும் கூறுவர். பரமுக்தி அளிக்க வல்ல தெய்வம் சிவபெருமான் ஒருவரே. ஆகவே, சிவபெருமானை வணங்கினால் இப்பிறவியில் பொருளும் பேரின்பமும், முடிவில் முக்திப் பேறும் கிட்டும். சிவபெருமான் பெருங்கருணை கொண்டு இதுகாறும் நமக்கு அருளியவற்றை உணர்பவர்களுக்கே புரியும். அந்த இறைவன், மங்கலமானவர், மலங்கள் (குற்றங்கள்) அற்றவர், ஆகையால், செம்மையான பொருளான அவருக்கு நாம் சிவன் என்று பெயர் சூட்டியுள்ளோம். அவர் என்றும் உள்ளவர். அவர் எல்லையற்ற சக்தியாகிய ஆற்றலை உடையவர். அவருடைய சக்தியை ஒரு பெண்ணாக உருவகித்து நாம் <u>சக்தி</u> என்கிறோம். சக்தி என்பது சிவத்திற்குள்ளேயே அடங்கி நிற்பது. இதுவே <u>மாதொருபாகன்</u> திருவுருவ விளக்கம். இறைவன் பிறப்பு, இறப்பு, பந்தம், பாசம், அன்பு, உறவு, நீளம், அகலம், காலம், மொழி என்று எவற்றையும் கடந்தவர். பந்தமும் பாசமும் அற்றவருக்கு குடும்பமும், குழந்தைகளும் ஏது ? அறத்தை நிலைநாட்டும் பொருட்டு, அவரிடமிருந்து தோன்றிய சக்திகளை நாம் அவர் குழந்தைகளாக பாவித்து, <u>விநாயகர்</u>, <u>பைரவர்</u>, <u>வீரபத்திரர்</u>, <u>முருகர்</u> என்று பெயரிட்டு, நமக்கு புரியும் குடும்ப முறையில் பாவித்து வணங்குகிறோம்.

நாம் வாழும் இந்த பேரண்டத்தைத் தீர ஆராய்ந்து பார்த்தால், மூன்று பொருட்கள் எப்போதும் இருப்பது புரியும். இறைவன், நம் போன்ற உயிர்கள், மற்றும் ஐம்பூதங்களை உள்ளடக்கிய பாசம். நம் போன்ற உயிர்கள் பிறந்து, இறந்து மீண்டும் மீண்டும் பிறந்து இறக்கும் தன்மையுடையது. இதுவே பிறவிச் சுழல் எனப்படும். இந்தத் துன்பச் சுழலில் இருந்து விடுபட்டு முக்தியடைய வேண்டுமானால், அது அந்த சிவபெருமானை வணங்குவதால் மட்டுமே கைகூடும். ஆனால், உயிர்களை சிவபெருமானோடு அண்ட விடாமல் தடுப்பது, இந்த உலகில் உள்ள சடப்பொருட்களாகிய பாசம். சில உதாரணங்கள்: ஆணவம், பேராசை, செருக்கு, மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை. சைவ சித்தாந்தத்தம், இறைவனை <u>பதி</u> என்றும், உயிர்களைப் <u>பசு</u>(ஆன்மா) என்றும், மற்ற தளையை, <u>பாசம்</u> என்றும் கூறுகிறது. இதுவே <u>முப்பொருள் உண்மையாகும்</u>. இந்த 3 பொருட்களும் <u>அநாதியானவை</u>. எப்போதும் இருப்பவை. இறைவனுக்கு உயிர்கள் நன்றி சொல்ல கடமைப்பட்டுள்ளன. திருமந்திரத்தில் திருமூலர் கூறும் இந்த செய்யுளைக் கவனியுங்கள்:

*பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில்*
*பதியினைப் போல் பசு பாசம் அனாதி*
*பதியினைச் சென்று அணுகாப் பசு பாசம்*
*பதி அணுகில் பசு பாசம் நில்லாவே.* - திருமந்திரம், திருமூலர்.

இறைவன் அனாதியாய் இருப்பவர். அவரைப் போலவே, உயிர்களும், பாசமும் அனாதியாய் என்றும் இருப்பவை. உயிர்களையும், பாசத்தையும் சிவபெருமான் படைக்கவில்லை. சிவபெருமான் என்று உண்டோ, அன்றிலிருந்தே, இந்த உயிர்களும், பாசமும் உள்ளவை. பிறவிச் சுழலில் உழலும் உயிர்கட்கு, சிவபெருமான் ஒருவரே முக்தி அளிக்கும் வல்லமை பெற்றவர். வேறு எவருக்கும் அந்த வல்லமை கிடையாது. ஆகவே, உயிர்களாகிய நாம், நமக்கு கொடுக்கப்பட்டிருக்கும் இந்த உடலாகிய கருவியைக் கொண்டு சிவபெருமானைத் தொழுது அவர் திருவடி சேர வேண்டும். பல பிறவிகளில் சிவ புண்ணியம் செய்தால் மட்டுமே, சிவபெருமானை உணர்ந்து அவரைத் தேடித் தொழுது, அவரின் அருள் பெற்று திருவடிப் பேறு கிட்டும். மற்றவர்கள் சிவ புண்ணியங்கள் செய்யும் வரை பிறவிச் சுழலில் உழன்று கொண்டே இருப்பர். சிவபெருமானின் ஐந்து தொழில்களை செய்ய உதவி கரணமாக இருக்கும் மற்றபிற தேவர்களையும், பிரம்மன், விஷ்ணு, போன்ற தேவர்களையும் குலதெய்வத்தையும் வணங்கினாலும், முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை வணங்கினால் மட்டுமே திருவருளும் முக்தியும் கிட்டும். ஆகவே, சிறுதெய்வ வழிபாட்டில் நம் பொன்னான காலத்தை வீணடிக்காமல், முழுமுதற் கடவுளாகிய பிறப்பும் இறப்பும் ஆதியும் அந்தமும் இல்லாத சிவபெருமானை வணங்குங்கள் என்று நம் சமயாச்சாரியார்கள் அறுதியிட்டுக் கூறுகிறார்கள். ஓம் நமசிவாய.

சிவபெருமான், நம் மீது பெருங்கருணை கொண்டு அருவம், உருவம், அருவுருவம் ஆகிய மூன்று நிலைகளில் தன்னை உயிர்களுக்கு உணர்த்தி அருள் புரிகிறார். கண்களால் காண முடியாத பொருளாக, உணர மட்டுமே முடியும் நிலையில் அருவமாகவும் (சிதம்பரம்), நீண்ட சடை கொண்டு, பிறை, கங்கையைத் தலையில் தரித்து பல்வேறு மூர்த்தங்களாய் நாம் கண்களால் கண்டு மகிழ்ந்து வணங்கும் உருவமாகவும், சிவலிங்கமாக சதாசிவ மூர்த்தியாக அருவுருவ நிலையில் தன்னை உணர்த்தி உயிர்களுக்கு அருள் புரிகிறார்.

உயிர்கள் தங்களோடு இணைந்தே இருக்கும் மலத்தை நீக்கி சிவபெருமானின் திருவடியை அடைவதற்கு, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று நான்கு படிநிலைகள் உள்ளன. உயிர்களாகிய ஆன்மாக்கள், இறைவனது உருவத் திருமேனிகளைத் தமக்கு புறத்தே வணங்கிச் சிவாலயத்திற்கும் சிவனடியார்களுக்கும் திருத்தொண்டு செய்தல் சரியை வழிபாடு ஆகும். சிவாலயத்தில் திருவலகிடுதல், திருநந்தவனம் அமைத்தல், சிவனடியார்களுக்குரிய பணிகளைச்



போது தான் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகள் நிறைய இருக்கின்றன. சிவதொண்டு செய்யும் போதும், சிவாலய தரிசனம் செய்யும் போதும், சிவ பூசை செய்யும் போதும் யாரும் உருத்திராக்க மாலை அணியலாம். ஆகவே, இன்னும் ஏன் தயக்கம் ? இன்றே உருத்திராட்சம் அணியுங்கள். உங்கள் மனைவி, குழந்தைகளுக்கும் அணிவியுங்கள். உங்கள் வீட்டு கால்நடைகளுக்கும் வாகனத்திலும் உருத்திராட்சத்தை அணிவிக்கலாம். உருத்திராட்சத்தை அணிந்து, நெற்றி நிறைய திருநீறணிந்து பஞ்சாட்சர மந்திரமான நமசிவாய, சிவாயநம சொல்லுவார்க்கு ஒரு தீங்கும் நெருங்கவே நெருங்காது.

## *4. நம் குருமார்கள் யார் ? சமய, சந்தான குரவர்கள்*

7 ஆம் நூற்றாண்டில் சமண பௌத்த சமயங்கள் அரசர்களின் துணையோடு பரவிய போது, சைவ சமயத்தை இறைவன் திருவருளால் நிலை நிறுத்தியவர்களில் நால்வருக்கு முக்கிய பங்குண்டு. தேவாரம் பாடிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் மற்றும் திருவாசகம், திருக்கோவையார் பாடிய மாணிக்கவாசகர் நால்வர்களே சமயக் குரவர் (குரு) எனப்படுவர். 3 வயதிலேயே சிவபெருமானின் திருவருளால் உமையம்மையின் திருமுலைப்பாலை உண்டு சிவஞானம் பெற்று பதிகங்கள் பாடி பல அற்புதங்கள் செய்து 16 வயது வரை வாழ்ந்து சைவத்தை நிலைநாட்டியவர் திருஞானசம்பந்தர். சமணர்களின் பள்ளிக்கூடத்தின் மூலம் சமண சமயத்தில் உழன்று, இறைவன் திருவருளால் சைவ சமயம் திரும்பி, தேவாரம் பாடி 81 வயது வரை வாழ்ந்து முக்தியடைந்தவர் திருநாவுக்கரசர். இறைவனின் திருவுருவமே சுந்தரராக அவதரிக்கப் பெற்று 18 வயது வரை வாழ்ந்து பல்வேறு செயற்கரிய அற்புதங்களை செய்தவர் சுந்தரர். பாண்டிய நாட்டிலே சிவபெருமானால் தடுத்தாட்கொள்ளப்பட்டு திருவருள் பெற்று, திருவாசகம், திருக்கோவையார் பாடி தேனமுதத்தைத் தந்து 32 வயது வாழ்ந்தவர் மாணிக்கவாசகர். பின்னர் வந்த சந்தான குரவர்களான மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாச்சாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாச்சாரியார் ஆகியவர்கள் நமக்கு சைவ சாத்திர நூல்களை அருளிய குருமார்கள். 63 நாயன்மார்களும் செயற்கரிய சிவதொண்டு புரிந்து நமக்கு வழிகாட்டியாக இருக்கும் குருமார்கள். நாயன்மார்களின் 63 வரின் வரலாற்றை முழுவதுமாகப் படித்து, கேட்டு அறிந்து நம் குழந்தைகளுக்கும் சொல்லிக் கொடுப்பது நம் தலையாய கடமையாகும்.

தொங்குமாறும் (சிவசக்தியாக) வெளியே தெரியுமாறும் 3 முடிச்சு போட்டு அணிய வேண்டும்.இந்த முடிச்சு பின் பக்கமோ, வலது தோள் பக்கமோ இருக்க வேண்டும். இந்த உருத்திராட்சத்தை ஒருபோதும் எக்காரணம் கொண்டும் கழற்றவே கூடாது. நம்மோடு கூடவே இருந்து நாம் சிவனடி சேரும் வரை நம் கூடவே வரவேண்டும்.

ஆலகால விடத்தை சிவபெருமானார் தம் கழுத்தில் தங்க வைத்து உயிர்களைக் காத்ததை குறிக்கும் பொருட்டே கண்டமணி அணிகிறோம். இயற்கையாகவே நம் கழுத்து பகுதியில் விஷத்தை முறிவு செய்யும் காரணிகள் உள்ளன. ஆதிபராசக்தி தன் உடல் முழுவதும் திருநீறும் உருத்திராட்சமும் அணிந்து கொண்டதாக அருணாசலபுராணம் கூறுகிறது. ஆகவே, பெண்கள் எல்லோரும் எல்லா சமயங்களிலும், விலகி இருக்கும் நாட்களிலும் கண்டிப்பாக தவறாது அணிந்திருக்கலாம். நீத்தார் கடன், பெண்கள் தீட்டு, கணவன் மனைவி தாம்பத்திய நேரம் என்று எல்லா நேரங்களிலும் தவறாமல் கண்டமணியை அணிந்திருக்கலாம். கண்டமணி அணிந்து கொண்டு நீங்கள் எப்போதும் போல வாழ்கையை மேற்கொண்டிருங்கள். சிவம் உங்களோடு இருக்கும்.

உருத்திராட்சம் அணிபவர்கள் மது அருந்துதல், புகை பிடித்தல், புலால் உண்ணுதல் ஆகியவற்றைப் படிப்படியாக விட்டு விட முயற்சிக்க வேண்டும். முக்கியமாக மாடு, பன்றி மாமிசத்தை ஒருபோதும் சாப்பிடக் கூடாது. உருத்திராட்சம் அணிவதால் மனமும் உடலும் தூய்மை அடையும். இதை அணிந்த பின்னர் எந்த துர் சக்தியும், தீய சக்தியும் உங்களை அண்டாது. உருத்திராட்சம் ஒரு சிவ கவசமாக இருக்கும். நீராடும் போது, கண்டமணியில் பட்டு வரும் நீர் கங்கைக்கு சமமாகும். சிறுவர்களுக்கு நல்ல படிப்பு திறனும், கவன ஒருமை, ஞாபக சக்தியும் கிடைக்கும். பெண்களுக்கு அனைத்து செல்வங்களும் உறுதியான தாலி பாக்கியமும் கிட்டும். திருமணம் ஆகாதவர்களுக்கு விரைவில் திருமணம் நடைபெறும். குழந்தை பேறு வேண்டுபவர்களுக்கு குழந்தை பேறு கிட்டும். வேலை தேடுபவர்களுக்கு தகுதியான வேலை கிடைக்கும். என்ன கிடைக்காது உருத்திராட்சம் அணிபவர்களுக்கு ? சிவசிவ. உருத்திராட்சத்திற்கு இயற்கையாகவே மருத்துவ குணங்களான இரத்த அழுத்தத்தை கட்டுப்படுத்தும் தன்மையும், உடலின் வெப்பத்தை சீராக வைத்திருக்கும் தன்மையும் உள்ளது. மருத்துவ உலகமும் ஏற்றது.

உருத்திராட்சம் அணிந்து நெற்றி நிறைய நீறு பூசி, பஞ்சாட்சர ஐந்தெழுத்து மந்திரத்தை சொல்பவர்களுக்கு சிவபெருமானார் கூடவே இருந்து வேண்டியவற்றை அருள் செய்வார். உருத்திராட்சம் அணிய சிலர் தயங்குகிறார்கள். இந்த தயக்கம் தேவையற்றது. யார் வேண்டுமானாலும் கண்டமணி அணியலாம். உருத்திராட்சத்தை மாலையாக அணியும்



செய்தல் ஆகியன சரியையாகும். இறைவனது அருவுருவத் திருமேனியை (சதாசிவனை - சிவலிங்கத்தை) அகத்தும் புறத்தும் பூசித்தல் கிரியை வழிபாடு ஆகும். சிவபெருமானை அகத்தே பூசித்தல் யோக வழிபாடாகும். அது மனத்தை விடயங்களின் வழியே போகாவண்ணம் நிறுத்திச் சிவத்தை தியானித்து, பின்பு தியானிப்போனாகிய தானும் தியானமும் தோன்றாமல், தியானப் பொருளாகிய சிவன் ஒன்று மாத்திரமே விளங்கப்பெற்று சமாதி நிலை அடைதலாகும். பதி பசு பாசம் என்னும் முப்பொருள் உண்மையை அறிவிக்கும் ஞான நூல்களைக் கேட்டு சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடுதல் ஞானத்தில் ஞான வழிபாடு எனப்படும். இந்த நான்கு வழிகளும் சிவபெருமானை எளிதாக அடைய நமக்கு வழிகாட்டுபவை. இறை வழிபாட்டைத் தவிர நாம் செய்யும் செயல்கள் அத்தனையும் ஓர் நாள் சாம்பலாகிப் போகும். சிவசிவ.

## *2. நம் “புனித” நூல்கள் எவை ? சைவநெறி நூல்கள்*

எல்லையற்ற பரம்பொருளின் தன்மைகளையும், தோத்திரங்களையும் பெருமையையும் வெறும் ஒரு சிறு புத்தகத்தில் ஒடுக்கிவிட முடியுமா ? வேதங்களும், சிவாகமங்களும், புராணங்களும் சைவத்தின் தொன்மையைப் பறைசாற்றுவன. வேதங்கள் 4: ரிக், யசூர், சாமம், அதர்வனம். வேதங்கள் உலகிற்கு பொதுவான அறங்களைச் சொல்வது. இது அருநெறிய மறை எனப்படும். சைவத்திற்கு சிறப்பு சேர்ப்பது சிவ ஆகமங்கள். இவை மொத்தம் 28. சிவ ஆகமம் சத்திநிபாதத்திற்குரிய நுட்பத்தைச் சொல்வது. இது பெருநெறி எனப்படும். இவை வடமொழியில் உள்ளன. இவற்றின் கருத்துக்களையும் சைவ சித்தாந்தத்தையும் தமிழில் பல்வேறு நூல்கள் தாங்கியுள்ளன. தமிழின் தோத்திர நூல்களாக பன்னிரு திருமுறைகளும், சாத்திர நூல்களாக 14 சாத்திரங்களும் உள்ளன. திருக்கோவில்களிலும், வீட்டிலும் திருமுறை பதிகங்களை தினமும் ஓத வேண்டும். இவை நமக்கு நன்மையை பெருக்கி, அல்லவற்றை விலகச் செய்யும். குடும்பத்தில் மகிழ்ச்சி பெருக்கும். திருமுறையே வாழ்வின் நெறிமுறை. திருமுறை அறிவோம். குழந்தைகளுக்கு திருமுறை பாடல்களும், சைவ சமய நெறியை அறிவிப்பதும் பெற்றோர்களின் மிக முக்கியமான கடமை. நம் நூல்கள் யாவும் காலத்தை வென்றவை. பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எழுதப் பட்டிருந்தாலும் இன்றும், என்றும் ஒரு சிறு எழுத்து பிறழாமல் உண்மை உரைப்பவை. உலகில் வேறு எதற்கும் இந்த அருள் கிடையாது. இது இறைவனின் அருளால் மட்டும் கூடும். சைவ சமயமே சமயம்.

உ
சிவமயம்

*அநாதியானதும், அநாதியான முதல் நூல்களை உடையதும் எனக் கொள்ளப்படும் சைவ சமயத்தின் பிரமாண நூல்கள்*

திருமுறை சார்ந்த நூல்கள்
பன்னிரு திருமுறை 12 - தோத்திரம்
- ✓ திருக்கடைக்காப்பு (திருமுறை 1,2,3 திருஞானசம்பந்தர்)
- ✓ தேவாரம் (திருமுறை 4,5,6, திருநாவுக்கரசர்)
- ✓ திருப்பாட்டு (திருமுறை 7, சுந்தரர்)
- ✓ திருவாசகம், திருக்கோவையார் (திருமுறை 8, மாணிக்கவாசகர்)
- ✓ திருவிசைப்பா, திருப்பல்லாண்டு (திருமுறை 9, 9 ஆசிரியர்கள்)
- ✓ திருமந்திரம் (திருமுறை10, திருமூலர்) பிரபந்தம் (திருமுறை 11, 12 ஆசிரியர்கள்)
- ✓ பெரியபுராணம் (திருமுறை 12, சேக்கிழார்)
- ➢ திருத்தொண்டர் புராணசாரம்
- ➢ திருப்பதிக்கோவை
- ➢ திருப்பதிகக்கோவை
- ➢ திருமுறை கண்டபுராணம்
- ➢ சேக்கிழார் புராணம்
- ➢ திருத்தொண்டர் திருநாமக்கோவை

வீரசைவ நூல்கள்
- சித்தாந்த சிகாமணி
- பிரபுலிங்க லீலை
- ஏசு மத நிராகரணம்
- இட்டலிங்க அபிடேகமாலை
- கைத்தல மாலை
- குறுங்கழி நெடில்
- நெடுங்கழி நெடில்
- நிரஞ்சன மாலை
- பழமலை அந்தாதி
- பிக்ஷாடன நவமணி மாலை
- சிவநாம மகிமை
- வேதாந்த சூடாமணி
- திருத்தொண்டர்மாலை
- ஊத்துக்காடு வேங்கடசுப்பையரின் ஸப்த ரத்னம்

திருநெறி
- ○ வேதம் 4 – அருநெறிய மறை: உலகிற்கு வேண்டிய பொது அறம் சொல்வது
- ○ சிவ ஆகமம் 28 – பெருநெறி: சத்திநிபாதத்திற்குரிய சைவ நுட்பங்களைச் சொல்வது

சைவ சமய சாத்திர நூல்கள்
1. திருவுந்தியார் - திருவியலூர் உய்யவந்த தேவநாயனார்
2. திருக்களிற்றுப்படியார் - திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார்
3. சிவஞானபோதம் - மெய்கண்ட தேவநாயனார்
4. சிவஞான சித்தியார் - திருநறையூர் அருள்நந்தி தேவநாயனார்
5. இருபா இருப:்து - அருள்நந்திசிவாசாரியார்
6. உண்மை விளக்கம் - திருவதிகை மனவாசகங்கடந்தார்
7. சிவப்பிரகாசம் - உமாபதிசிவாசாரியார்
8. திருவருட்பயன் - உமாபதிசிவாசாரியார்
9. வினாவெண்பா - உமாபதிசிவாசாரியார்
10. போற்றிப்ப:்றொடை - உமாபதிசிவாசாரியார்
11. உண்மைநெறி விளக்கம் - உமாபதிசிவாசாரியார்
12. கொடிப்பாட்டு - உமாபதிசிவாசாரியார்
13. நெஞ்சுவிடுதூது - உமாபதிசிவாசாரியார்
14. சங்கற்ப நிராகரணம் - உமாபதிசிவாசாரியார்

புராண நூல்கள்
- திருவிளையாடற் புராணம்
- மதுரைக் கலம்பகம்
- மதுரைக் கோவை
- மதுரை மாலை
- காஞ்சிப் புராணம்
- கச்சி ஆனந்த ருத்ரேசர் பதிகம்
- கச்சித் திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு
- சிதம்பர மும்மணிக் கோவை
- திருவாரூர் நான்மணி மாலை
- சிதம்பர செய்யுட் கோவை
- காசிக் கலம்பகம்
- திருக்குற்றாலக் குறவஞ்சி
- பிரபந்தத்திரட்டு
- இரட்டைமணி மாலை
- கந்த புராணம்

பிற நூல்கள்
- சித்தாந்த சாத்திரம்
- சொக்கநாத வெண்பா
- சொக்கநாத கலித்துறை
- சிவபோக சாரம்
- முத்தி நிச்சயம்
- சோடசகலாப் பிராத சட்கம்
- திருப்புகழ்
- முத்துத்தாண்டவர் பாடல்கள்
- நீலகண்டசிவன் பாடல்கள்
- நடராசபத்து

*இன்னும் எண்ணற்ற நூல்களும் உள.*

ஒட்டக்கூத்தர், புகழேந்தி, பட்டினத்தார், தாயுமானார், சிவப்பிரகாசர், குமரகுருபரர், சைவத் திருமடத்து தலைவர்கள், அருளாளர்கள், ஔவையார், தண்டபாணி சுவாமிகள், சிதம்பர சுவாமிகள், பாம்பன் சுவாமிகள், மீனாட்சி சுந்தரம்பிள்ளை, முத்துத்தாண்டவர், மாரிமுத்தாப்பிள்ளை, அருணாச்சலக் கவிராயர், கிருஷ்ணபாரதி, சுத்தானந்த பாரதி, 18 சித்தர்கள் ஆகியோரது நூல்கள்

## 3. சைவ சாதனங்கள் / சின்னங்கள் எவை ?

திருநீறும், உருத்திராக்கமும், பஞ்சாக்கர மந்திரமும் (நமசிவாய, சிவாயநம, சிவசிவ, சிவய, சி) முக்கியமான சைவ சமய சின்னமாகும். தீமைகளினின்றும் நம்மைப் பாதுகாத்து நீண்ட ஆயுளும் கொடுத்து இறைவன் அருள் தரும் மந்திரம் இவை. குற்றமற்ற பசுவின் சாணத்தை நெருப்பினாலே சுடுவதனால் உண்டாகும் நீறே தூய திருநீறாகும். வெண்மை நிறத் திருநீறே அணியத்தக்கது. சமய தீட்சை பெற்றோர் மாத்திரமே திருநீற்றை நீரில் கரைத்து திரிபுண்டரமாக அணியும் தகுதியுடையோர். மற்றோர் நீரில் கலவாது பொடியாக அணிதல் வேண்டும். திருநீற்றை மூன்று கோடுகளாக, இரண்டு கடைப்புருவ எல்லை வரை அணிய வேண்டும். ஒவ்வொரு கோட்டிற்கும் இடையே ஒவ்வொரு அங்குல இடைவெளி வேண்டும். ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்களை நீக்கும் என்ற குறிப்பு தோன்ற தரிப்பதே, மூன்று கோடுகளினால் திருநீறு அணிவதாகும். தலை, மார்பு, கொப்பூழ், முழந்தாள்கள் இரண்டு, புயங்கள் இரண்டு, முழங்கைகள் இரண்டு, மணிக்கட்டுகள் இரண்டு, விலாப்புறம் இரண்டு, முதுகு, கழுத்து என்னும் 16 இடங்களில் அணியலாம். திருநீற்றை வடக்கு முகமாகவோ, கிழக்கு



முகமாகவோ தரித்தல் வேண்டும். தரிக்கும் போது, சிவபெருமானை சிந்தையில் வைத்து திருநீறு நிலத்தில் சிந்தாத வண்ணம் நெற்றியை மேலே தூக்கி “சிவசிவ”, “நமசிவாய” என்ற பஞ்சாக்கர மந்திரத்தை ஓதி அணிய வேண்டும். தூங்கி எழுந்த உடனும், தூங்குவதற்கு முன்னும், நீராடியவுடனும், பூசைக்கு முன்னும் பின்னும், உணவுக்கு முன்னும் பின்னும், கடமைகளைச் செய்யும் போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும் கட்டாயமாகத் திருநீறு அணிய வேண்டும். திருநீற்றை பட்டுப் பையிலோ, சம்புடத்திலோ மட்டும் வைக்க வேண்டும். குரு, சிவனடியார் திருநீறு கொடுத்தால், அவர்களை வணங்கி, அடக்கத்துடன் இரு கைகளையும் நீட்டி வாங்கிக் கொள்ள வேண்டும். திருநீற்றுக்கு மேலே குங்குமமேனும், சந்தனமேனும் அணியலாகாது. திருநீற்றுக்குக் கீழே, புருவ மத்தியில் குங்குமம் தரிக்கலாம். திருநீற்றை ஊதுவதோ, கோவில் தூண்களிலோ, வேறு இடங்களில் கொட்டுவதோ, கீழே சிந்துவதோ, பெரும் பாவம். திருநீற்றை எப்போது வேண்டுமானாலும் அணியலாம்.

உருத்திராக்கம் என்பது உருத்திரனது கண் எனப் பொருள்படும். திரிபுரத்து அசுரர்களாலே தமக்கு ஏற்பட்ட துன்பங்களைத் தேவர்கள் சிவபெருமானிடம் எடுத்துரைத்த போது, சிவபிரானது மூன்று கண்களில் இருந்தும் சிந்திய மணியே உருத்திராக்கமாகும். பத்தினிப் பெண்களுக்கு திருமாங்கல்யம் எத்தனை முக்கியமோ, அது போல சைவர்களுக்கு உருத்திராக்கம் அணிவது மிக முக்கியம். முறையாக உருத்திராக்கம் அணிந்து இறைவனிடம் அன்பு பூண்டார்க்கு உடல் நலமும், செல்வ வளமும், நெடு வாழ்வும், இன்ப வாழ்வும் இப்பிறப்பில் பெருகும். மறு உலகில் இறைவன் திருவடியினை எய்தி மாறா இன்பம் துய்த்து மகிழ்வர். உருத்திராக்கம் கண்டத்தில் அணியுங்கள்.

சைவர்கள், நமசிவாய, சிவசிவ, சிவாயநம, ஆகிய பஞ்சாக்கர மந்திரத்தை எப்போதும் உச்சரிக்க வேண்டும். உரு ஏறத் திரு ஏறும்.

## உருத்திராட்சம் எல்லோரும் அணியலாமா ?

சிவபெருமானின் கண்களில் தோன்றிய நீரே உருத்திராட்சமானது. அதை அணிபவரை அவர் தன் கண் போல காப்பாற்றுவார். ஆகவே, கண்டத்தில் மணியாகும் உருத்திராட்சத்தை யார் வேண்டுமானாலும் அணியலாம். பிறந்த குழந்தை முதல் வயதான பெரியவர் வரை, ஆண் பெண் என இரு பாலரும் தாராளமாக அணியலாம். எல்லா நேரத்திலும் அணிந்தே இருக்கலாம். சிகப்பு நூலினால் (சக்தி) 5 முக உருத்திராட்சத்தை (சிவன்) கோர்த்து, உருத்திராட்சத்தின் இரு பக்கமும் ஓர் முடிச்சு போட்டு கழுத்தில்